# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்.**

காலை 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 3-45 வரை சுத்தி

3-45 முதல் 4-30 வரை , தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம.

4-45 முதல் 5-30 வரை முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை,தனி)

5-30 முதல் 6-00 வரை முதல் மணி, பலி, சாத்துமுறை

6-00 முதல் மதியம் 12-00 வரை **ஸர்வதரிசனம்**

மதியம்

12-00 முதல் 1-00 வரை சுத்தி, 2வதுஅர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.

1-00 முதல் இரவு 9-00 வரை **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 6-00 வரை கல்யாணோத்ஸவம் வாகன சேவைகள், ஊஞ்சலசேவை முதலியன

இரவு 9-00 முதல் 10-00 வரை சுத்தி, இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியன

10-00 முதல் 10-30 வரை சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்

10-30 மணிக்கு ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை 3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 3-45 வரை சுத்தி

3-45 முதல் 4-30 வரை தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம.

4-45 முதல் 5-30 வரை முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை, தனி)

5-30 முதல் 6-00 வரை முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலசாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை ஸகஸ்ர கலசாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.

8-00 முதல் இரவு 9-00 வரை **ஸர்வதரிசனம்.**

மதியம்

1-00 முதல் மாலை 6-00 வரை கல்யாணோத்ஸவம், வாகனசேவை, ஊஞ்சல் சேவை முதலியன

இரவு 9-00 முதல் 10-00 வரை சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

10-00 முதல் 10-30 வரை சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 மணிக்கு ஏகாந்தசேவை (தனி)

**வியாழக்கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை · 3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை சுத்தி

3-45 முதல் 4-30 வரை தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் 8-00 வரை சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.

8-00 முதல் மாலை 6-00 வரை **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை கல்யாணோத்ஸவம், வாகன சேவைகள், ஊஞ்சல சேவைகள் முதலியன.

மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன

இரவு 8-00 முதல் 10-00 வரை **பூலங்கி ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 மணிக்கு ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக்கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர்.)

3-30 முதல் 5-00 வரை சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை அபிஷேகம் (தனி)

7-00 முதல் 8-30 வரை மூலவருக்கு சமர்ப்பணை முதலியன.

8-30 முதல் 9-30 வரை தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-30 முதல் 10-00 வரை 2வது மணி, பலி, சாத்துமுறை.

10-00 முதல் இரவு 9-00 வரை **ஸர்வதரிசனம்**

1-00 முதல் மாலை 6-00 வரை கல்யாணோத்ஸவம், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவை முதலியன.

இரவு 9-00 முதல் 10-00 வரை சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன.

10-00 முதல் 10-30 வரை சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 மணிக்கு ஏகாந்தசேவை.





மின்னாகத்தெழுகின்ற மேகங்காள்வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வற்கு
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாடோறும்
பொன்னாகம்புல்குதற்கென் புரிவுடைமைசெப்புமினே.

*[நாயச்சியார் திருமொழி-77]*



*முகப்புச்சித்திரம். கி. ஜகதீஸ்வரன்.*



தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்
திரு. பி. வி. ஆர். கே. பிரசாத்,
IAS,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்.
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
EDITOR
'Sapthagiri'
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.




# ஸப்தகிரி

டிசம்பர் 1979

மலர் 10
இதழ் 7

## உள்ளுறை





# ஆசிரியர் உரை

*ா பபோது, எவரால தோரறுவிககபபடடது எனபதைக கூற முடியாத ஒரறை வழிபபாதை போனறது நமது இந்து சமயம் மேலும இசசமயபாதை அரசியல, பொருளாதார, மறறும சமுக நெருக்கடிகளினல் ஏறபடட தொனறு அலல பேரினபப பெருஞ்சாலைககு இட்டுச்செலலும அருடபாதை இது குறை உள்ளவன உள்ளத்திலும ஆனமீக உணர் விளைத தட்டி எழுபபும பாதையாக இது விளங்குகிறது எனின, அதறகு முக்கிய காரணம அபபாதையை நனகு செப்பனிட் டவர்களான, இறைவனின அவதாரங்களாகக் கருதப்படும தவயோகிகளும, ஞானிகளுமேயாவர். அறநெறி அழிநது தீமை கள் பெருகும போதெல்லாம் இறைவன் இப்பூவுலகில் அவதாரம் செயகினருன எனற கீதை மொழிககேறப, பகதிச சூழ்நிலைககு கேடு நேரிடும போது அல்லது அச்சூழநிலை குன்றிடும போது இந்நாட்டில முனிவர்களும, ஞானிகளும பலா இநநாட்டில தோனறியுள்ளனர் எனபதை நமது சமய வரலாறு தெள்ளததெளிவாகக காட்டுகினறது மனிதப பிறவியின உயர்வற உயர்நத குறிககோளை முதன் முதலாக கணடதும, விண்டதும், பிறகு அந்நெறியில் நின்று முழு வெறறி பெறறதும் நமது பாரதமே அததகு பெருமைமிகு பாரதமண்ணில் அமரதவமும், தெய்வதவமும், திவய ஆறறலும கொணடு விளங்கிய மெய் யுணர்ந்தோர் பலர் நம் நாட்டில் தோனறினர். அத்தகு மகானகளினல்தான அவ்வபபோது மககளிடையே அவவககாலங் களின போது பகதி மார்ககததிலேயும, ஞான மார்க்கததிலேயும் கவாசசியும, நமபிககையும ஏறபட அதனறருன அமமக் களுடைய பழகக வழககஙகளும, முயறசிகளும பகதி மார்ககத்திற்கு ஏற்றவாறு அமையலாயின. மேலும இறைவனைப்பற்றிய உண்மைகளை அனுபூதியால் நேரிறகண்ட ஞானியர் இபபுண்ணிய பாரதததில் அவதரித்து "சேரவாரும ஜகததீரே" எனற அனபு முழககததினை எழுபபி, நமது நாடடினரை மட்டுமலலாது, பிற நாட்டாரையும ஆனமிகத துறையில் நாட்டங் கொள்ளச செய்தனர் இச்சிறபபினை மனதிற கொண்டுதான "இரும்பிறவித தளை நீஙகி இனபுறுவார தாம வாழ,விருமபி வரும ஞான மலிவியன பரத கண்டம" எனறு விவேகானநதரும, "பாருககுளளே நல்ல நாடு நம பாரத நாடு" எனறு பாரதியும பாரததததைப போறறிப் பரவினர்.*

*இததகு பெருமை கொண்ட பாரதம, தன்னுடைய பழம பெருமையை துறந்து, மனிதப்பிறவியின இறுதிக குறிக கோளினை மறந்து, 'கணடதே காடசி கொண்டதே கோல' மென மேலைநாட்டு நாகரிகததில் மூழகி, கரைதெரியா கலமென தத்தளிததபோது, கலங்கரை விளக்கமாக இந்நாட்டில் அவதரித்தனர் மகான்கள் பலர். ஆம், பக்தி மார்ககததிறகு ஒரு புது மெருகு ஏறறும் வகையில், நவபாரதத்தின் சிற்பிகளாக பரம ஹமஸர், ஸாரதா தேவியார், விவேகானந்தர், ஸ்ரீ அரவிந்தா ஆகியோா தோன்றினா ஆனல் இவர்களிடமிருந்து தனிதது, தனக்கென்ற ஒரு சூழநிலையை ஏற்படுத்திக கொண்டு, வேத காலத்து முனிவரை நினைவுறுததும் வகையில இனறைக்கு நூறு ஆணடுகளுககு முன்பு தோன்றி, இததலைமுறையினரிடையே வாழந்து, 1950-இல் அமரததுவம் அடைந்தவர் ஸ்ரீ ரமண மகரிஷி மறற ஞானியரும, முனிவரும உலகாயுத சூழ்நிலையை விட்டு, சமய அறிவுரைகளை ஊர்தோறும் சென்று வழங்கிய போது, இவர் மட்டும உலகாயுத ஆசைகள் மிகுந்த நகரததுச சூழநிலையிலேயே வாழ்ந்து, துறவு மனப்பானமையை மனதிற்கொண்டு, மனதை அடககுதலே ஞான மார்ககத்தின அடிப படைத தகுதி எனபதை, தன் சொந்த வாழ்க்கையின் மூலம் எடுததுக் காட்டினர் புறப்பற்றுக்களின் ஆதிககததிலேயே அகப்பறறினைத துறந்த உண்மை ஞானியாக இவர் விளங்கினர். அகப்பற்றின் அபாயத்தை தனது இளமபருவததிலேயே கண்டுணர்நது "உடலே ஒரு வியாதி" எனத தெளிந்து, தன்னைபபறறி அறிந்து கொண்டதனமூலம், இறைவனைககண்டு, ஸ்ரீ சங்கரரின அதவைதக் கொள்கைககு ஓர் உதாரணமாகவும், வழிகாட்டியாகவும தன வாழககையை மேறகொண்டார். அவர் மலர்ந்தருளிய சமயக் கருத்துக்கள் யாவும் சமய இலக்கத்திற்கு புதியனவல்லவெனினும், அக்கருததுக்கள் ஒரு சாமானி யனையும பிடிததிழுக்கும வகையில் தெளிவாக, அழகாக, அதே சமயதது அழுத்தமாக, செயற்படுத்தும வகையில் ஆமைந் திருப்பதால்தான, அவர் மற்ற ஞானிகளிடமிருந்து தனிததுப பிரகாசிக்கின்றுர். அதனல்தான ஜாதி, இனம மற்றும் இடபேத மினறி மககள் அவரை நாடிச் சென்றனர். அடக்கம, அமைதி, அன்பு, அருள் ஆகிய பண்புக கூறுகளின உதவியுடன தனனைபபறறி அறிந்து கொண்டதன மூலம, அகப்பறறைத் துறநது, இவ்விருபதாம் நூறறுணடில, இறைவனை மானசீகமாகத தரிசிதது, அதனறருன பெற்ற தன் அருடபார்வையினல் தன்னை நாடி வந்தவர்கள் உள்ளததில, ஞானமார்ககததின எளிமையை உணர்ததும வகையில், ஒரு நமபிககை நட்சததிரமாக ஜொலித்தார்.*

*தெனனடடின ஒரு கோடியில வெங்கடரமணனக பிறந்து, இளம பிராயததிலேயே இறைவனைக்கண்டு, பிறகு தனனு டைய வாழ்க்கையை அருணசலக குனறுகளில் "பிராமண சுவாமி'யாக துவககி, விரிநத கொள்கையின் பரந்த நெறறியுட னும, ஆழ்ந்த நோக்குடன அன்பொழுகும் கண்களுடனும, தெய்வ ஒளி வீசும திருமுகததுடனும் விளங்கி, ஞானததின் திருவுரு வாக, சத்துவக குணக்குனருக அமைந்து, ரமண மகிரிஷி என்று பகதர்களால் அழைககபபட்டு,மாசினறி விளஙகுந்திங்களாக, தெய்வததோடு உடனுறையுந் தெய்வமாகத் திகழ்ந்து, உலகமொழியாம மௌன மொழியின மூலம் சமயச்சாற்றினை தந்தருளிய அவருடைய வாழக்கை வரலாறு இனறைய தலைமுறையினரின அருட தாகததினைத தீர்க்கும ஒரு பேருறறுகும. "மகானகளின வாழக்கை லரலாறுகள் யாவும, நமமுடைய வாழ்ககையினையும் புனிதப்படுததிக கொள்ளலாம் என்பதனை நமககு நினைவுறுததவேயாம" என்று மேல்நாட்டு அறிஞன் லாங்பெலோ கூறியதை மனதிற்கொண்டு, ஸ்ரீரமணரின வாழ்ககை யுடன் நமது வாழ்க்கையை மானசீகமாக ஒப்பிட்டுக்கொண்டு, நம்மை நாமே திருததிககொண்டால், அதுவே, அவருடைய 100-வது பிறந்த நாளைக கொணடாடும இச்சமயதது, நாம் அவருக்கு வழங்கும் ஒரு நினைவஞ்சலியாக அமையும்.*

# செய்திச் சுருக்கம்

## புதிய வலம்புரிச் சங்கு



தக்ஷிணாவாத சங்கு என்று அழைக்கப்படும் ஒரு புதிய வலம்புரிச் சங்கு திருமலையில் 2-11-79 அன்று முதல ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்குப் பயன் படுத்தப்பட்டு வருகின்றது. தங்கக் கவசத்தினைக் கொண்டு விளங்கும் இச்சங்கினால் இறைவனுக்கு 'புருஷஸுக்த' மந்திரங்கள் ஒலிக்க பாலாபிஷேகம் நடைபெற்றது. இச்சங்கு, கடலில் கிடைக்கப் பெறும் படியான அரிய ஒன்றாகும். மேலும் இது, சாதாரணமாகக் காணப்படும், இடது பக்கத்திலில்லாது,வலப்பக்கத்திலிருந்து விளங்கும் அகச் செவிச் சுருள மடிப்புடன்காணப்படும் ஒன்றாகும். மிகவும் புனிதமாகக்கருதப்படும் இச்சங்கினால் எந்த நீரையும அர்க்கியாக விட்டால, அது புனித கங்கை நீரிற்கு ஒப்பாகும என்ற நம்பிக்கை பரவலாக உள்ளது. தி தி. தேவஸ்தானம இது போன்ற சங்கினை வாங்க பலகாலமாகவே விருப்பம் கொண்டு அணமையில் 10'' நீளமும் 3½'' அகலமும் கொண்ட மேற்காணும வலமபுரிச் சங்கு ஒன்றினை, குடிவாடாவைச் சார்ந்த திரு. பூர்ணசந்திரராவ என்பவரிடமிருந்து வாங்கியுள்ளது. இது கோர்ரமண்டல் கடற்கரைப் பகுதியிலிருந்து கண்டெடுக்கப்பட்டது. பக்தர்களின காணிக்கை மூலம் கிடைக்கப்பெறும தங்கத்தைக் கொண்டு, இச்சங்கிற்குத் தங்கத் தகடு பொருத்தப்பட்டுள்ளது விரைவில், தி. தி. தே. தன்னிடமுள்ள ரத்தினக் கற்களை இச்சங்கின மேல பொருத்த உள்ளது.

மேலும் தி. தி. தே. இது போன்ற 108 சிறிய வலமபுரிச் சங்குகளை சேகரித்துள்ளது. இவையாவும் மாலையாகக் கோக்கப்பட்டு, இதற்காக மூன்று கிலோ தங்கம (இதற்கான வேலைப்பாடுகளை தி. தி. தேவஸ்தான அணிமணித் துறை ஊழியர்கள மேற்கொள்வர்) பயன்படுத்தப்படும. இவ்வரிய சங்கு மாலை இறைவனுக்கு மிகவும் புனிதமான நாளாகக் கருதப்படும் மாக மாதத்தில் வரும் ''ரத ஸப்தமி'' நாளன்று ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு அணிவிக்கப்படும்.

## யாக்ஞவல்கியரின் ஜயந்தி விழா

திருச்சி மாவட்டத்தில் தஞ்சை புகலூரில் ஏழு நாட்களுக்கு அதாவது 26-10-79 முதல் 1-11-79 வரை ஸ்ரீ யோகீஸ்வர யாக்ஞவல்கியரின 25வது ஜெயந்தி விழா வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது.இவ்விழாவில் சுமார் 50க்கும் மேற்பட்ட தலைசிறந்த வேத பண்டிதர்களும், ரிக், யஜுர், சாம வேதங்களைப் பயிலும் மாணவர்களும் பங்கேற்றனர். மேலும் இது போது ஸ்ரீ மகாகணபதி ஹோமம், ஸ்ரீ ஸுக்த ஹோமம், ஸுதர்ஸன ஹோமம், ருத்ர ஏகாதஸி ஹோமம, ஸ்ரீ காயத்ரீ ஹோமம ஆகியவை உலக நன்மைக்காக நடத்தப்பட்டன. இவ்விழாவில வேத பண்டிதர்கள் கௌரவிக்கப்பட்டு, சுகல யஜுர் வேதம சமபந்தப்பட்ட போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு பரிசுகளும வழங்கப்பட்டன இவ்வெள்ளி விழா சமபந்தப்பட்ட 'மலர்' ஒன்றும் இவ விழாவின போது, சென்னையைச் சார்ந்த பத்மஸ்ரீ வைத்ய சுப்ரமண்ய ஐயரவர்களால் வெளியிடப்பட்டது.

நன்றி· தகவல்.

**திரு. பி. எஸ். ஸ்ரீநிவாஸன்.**

## குழந்தைகள் கண்காட்சி

உலகக்குழந்தைகள் ஆண்டு முன்னிட்டு, தி. தி. தேவஸ்தானம் 8-11-79 மற்றும் 9-11-79 தேதிகளில் முறையே திருமலையிலும் திருப்பதியிலும் குழந்தைகள் கண்காட்சி ஒன்றினை நடத்தியது. தி. தி. தேவஸ்தான ஊழியர்களின் குழந்தைகள் மட்டுமே பங்கேற்கும் வகையில் இக்காட்சி போட்டி நடைபெற்றது. இப்போட்டி ஒரு வயதிற்

(39-ம பக்கம் பார்க்க)

# மஹிஷி வதம்

தேவாகளும் அசுரர்களும பாாக் கடலை கடைந்து அதிலிருநது கிடைக்கபபெற்ற அமுதத்தை பலம் பொருநதிய அசுரர்கள் அபகரித்துச் சென்றனர். இதைக் கணணுற்ற மஹாவிஷ்ணு கணடவா மோஹம கொள்ளும் ஜகன் மோஹினி என்ற அழகிய பெண உருககொண்டு அசுரர்கள் முன் தோன்றிஞர். கண்டவர் மயங்கிடும் கட்டிளங் கன்னியைக் கணடவுடன் அசுராகள அனைவரும் அவளை அடைய தஙகளுக்குள் போடடிப் போட்டுக்கொணடு இயற்கையிலேயே நிரம்பப்பெற்ற அசுர குண இயலபினபடி கையிலிருந்த அமுத கலசத்தையும் மறநது, பெணணை அடைவதில் நாட்டம கொணடு, நான் நீ என்று தங்களுக்குள்ளேயே சணடையிடத்துவங்கினர். இத்தருணததில மோஹினியான பரமாத்மா அந்த அமுத பாணடத்தை கையில் எடுத்துக்கொணடு அவாகளை சமாதானப் படுத்தி அவர்களை வரிசையாய் அமரச்செய்து தான இந்த அமுதத்தை சமமாய் விநியோகிப்பதாய் வாக்களித்து தேவாகளில் இருந்து ஆரமபித்து தேவர்கள் அனைவரையும் அமுதுணணச்செய்து அவாகளனைவரையும தானுட்பட சாஹா வரம பெற்று சிரஞ்ஜீவிகளாக்கிஞர்.

இது கண்டு மட்டற்ற கோபம் கொணட அசுரர்கள தேவாகளுடன நெடுங்காலம் போா புரிந்தனர். ஆஞல தேவாகள் ஒருவர்கூட இறக்கவில்லை. பல அரககாகள் மடிந்து போயினர். இதைக் கணணுற்ற ராக்ஷஸர்களின் குருவான சுக்ராச்சாரியார் அவர்களிடம "அரக்காகளே! தேவர்கள் அமுதுணடவர்கள். அவர்களுடன் நீங்கள் எத்தனைக் காலம் போரிட்டாலும் அவாகளை உங்களால் அழிக்கமுடியாது. ஆகையால என சொறபடி கேட்டு தற சமயம் பின் வாங்கிச் சென்று பிறகு அவாகளிடமே வரம்பெற்று அவாகளைத துன்புறுத்த நான வழிசொலகிறேன்" என்ருர். அதன்படி பல அரக்கர்கள் சிவன, பிரமமன், விஷ்ணு போனறவர்களை எணணி தவமிருந்து வரஙகளைப் பெறறு தேவர்களைத் துன்புறுத்தி வநதனா. துனபம எனபது அமுது உணட தேவாகளைக் கூட விடவில்லை பாருங்கள! இவ்வாருக கடுந்தவமிருநது பல அர்ககாகள மஹாபலம் பொருந்தியவாகளாகவும இருந்து, அசுர குரு சுகராசசாரியாா அவாகளின சூக்ஷும புத்தி சாதுாயத்துடன கூடி மரணத்தை மிகுந்த காலம் தாழும் வகையில் கேட்கப்பெற்று தேவர்கள பால துவேஷம கொணடு அவாகளை இமசிதது வரலாயினா. அவர்கள் வேணடும் வரஙகள மிகவும் விசித்திரமாய் இருக்கும. மானிடன் எனருல் துசசம. ஒரு மானிடனுவது என்னைக் கொலலுவதாவது ஆதலால் என்னை ஒரு மானிடனைத் தவிர வேறு யாராலும் எனக்கு மரணம சம்பவிக்கக் கூடாதென்று வரம் கேட்டான் ஒரு அரக்கன. பூமியிலோ, விணவெளியிலோ, வீட்டின் உள்ளேயோ வெளியேயோ, காலையிலோ, மாலையிலோ, மனிதனுலோ, மிருகத்தாலோ எனககு மரணம் சம்பவிக்கக் கூடாதென்று கேட்டான ஒருவன். சிறு பெண குழநதைத தவிர பிற எந்த ஜீவராசியும் என்னை கொலலக் கூடாதென்றுகேட்டான மற்ெருருவன்.

பெண சகதி ஒனறின் பாதம் தவிர வேறு எதாலும் எனக்கு மரணம் உணடாகக் கூடாதென்று வரம் கேட்டான எருமை முகமும் அரக்கவுடலும் கொணட மஹிஷாசுரன் என்ற அரக்கன.

அவனை வதைகக வேணடி அணட சராசரஙகளுககும் முப்பது முக்கோடி தேவர்களுககும் அதிபதியான ஆதி பரா சக்தியே பூமியில் தோன்றி, அரக்கன் மஹிஷாசுரனை வதைத்து பரளய காலாகனிபோல் ஊாத்வ தாணடவம செய்தனள தேவர்


திரு. சந்திரமௌலி,
திருபபதி.


மூவர் யாவரும அவளை சமாதானப் படுத்த எணணி பல வகை துதிகள் செயதனர்.

இநநிலையில் மஹிஷா சுரன் வதைபடடதை அறிநத அவனது தங்கை, எருமை முகம் கொண்டவளும், அரகக உடல் கொண்டவளுமான கரமபிகை எனற அரக்கி, கடும் சினமும அடஙகா வேதனையும் அடைநது தன தமையனை கொன்றவர்களை பழிவாஙக எண்ணி பல அரக்காகளின் உதவியையும நாடிஞள.

ஊழி தாண்டவமாடும் ஆதி பரா சகதியினமுன் செல்ல அமுதுண்ட தேவாகளே செல்ல அஞ்சும் இத்தருணத்தில அரக்கர் யாருக்காவது கரம்பிகையின் கோரிக்கைக்கு இணஙக துணிவு வருமா?

அரக்கர்கள் யாவரும் தன் துணைக்கு வர மறுத்து விட்ட நிலையில் மன வருத்தத்துடன் அசுர குரு சுக்ராசாரியாரிடம் சரணடைந்து யோசனை கேட்டாள்.

அதற்கு அவர் "ஹே மஹிஷீ! நீ பிரம்மனை நினைத்து தவமேற்கொள். பிரம்மதேவன் உனமுன் தோன்றியதும் அவனிடம், இரணடு ஆண் தேவர்களுக்குப்பிறந்த ஒரு குழந்தை, பன்னிரெணடு வருடம் ஒரு மானிடனுக்கு அடிமையாயிருந்த அந்தக் குழநதையிஞலன்றி வேறு எதாலும் எனக்கு மரணம சம்பவிககக் கூடாதென்று வரம் பெற்று வா" என்று கூறிஞர்.

இது நடககக் கூடியதா?

இரணடு ஆணகளுக்கு எஙகாவது குழநதை பிறக்குமா.

இது கேட்டு மஹிஷியும கானகம் சென்று சுறறிலும் தீமூட்டி நடுவில நினறு ஆயிரம் ஆணடுகள கடும தவம புரிந்தாள்.

மஹிஷியின தவம் கணடு மனமிள கிய பிரமமனும் அவன்முன தோனறி அவள் வேண்டிய வரங்களைக் கொடுத் தான்.

பிரம்மனுல் வரம் கிடைக்கப் பெறற மஹிஷி நேராக இந்திர லோகம் சென்று இநதிரனைவென்று தேவர்களை இம்சித்து அடிமை களாககிக் கொணடு சுரபானம அருநதிக் கொணடு ஆட்சி செலுததி வந்தாள்.

இநநிலையில் தேவாகள் மஹிஷி யின கொடுமைகள் பொறுக்க முடி யாமல் பரமாதமாவான மஹா விஷ்ணுவை சரணடைநதனர்.

காக்கும் கடவுளான பரமாதமா ''தேவாகளே' ஒருவன நல்லவனே கொடியவனே அவன தவம் செய்து வரம பெற்ருனுகில் அந்தத் தவத்தின் பலனை அடைநதே தீரவேணடும் அதன்படி இநத மஹிஷி பூர்வ ஜன்மத் தில் தததாத்ரேய முனிவரின் மனைவி. தன்னல மறற வேளவியில் அவர் ஈடுபட்டிருநத சமயம் காமவேசம் கொணடு அவரை அடைய எணணிய தால அவர் இவளை காமம் மிகக கொணட அரக்கியாய் மஹிஷி உருக கொணடு அலையக் கடவாய் என சபிதததன பேரில், ஆதி பராசக்தி யால வதம் செயயப்பட்ட மஹிஷா சுரனின் தஙகையாய்ப் பிறநதவள் இவள். ஆயிரம் காலம், தீயின நடு வில் ஒறறைக் காலில நினறு தன உடலை வருத்தி தவம இருந்து வரம பெறறவள் அவள செயத தவப் பலன முடியும வரை அவனை ஒன்றும செயய இயலாது'' என்றனா.

"அதற்கு நாங்கள என்ன செய் தோம. அவள் தவ பலம் முடியும் வரை நாஙகள இநத இமசை பட வேணடியதுதானு?'' என இந்திரன் இயமப, அதற்கு மஹாவிஷ்ணு "தேவர்களே! அஞ்ச வேணடாம். அதுவரை மஹிஷியை இஙகிருநது அப்புறப்படுதத வழி செய்கிறேன் நீங்கள் உங்கள் இருப்பிடம் செல் லுஙகள'' என்ருா.

பிறகு மாலவன, பிரம்மனையும், ருதரனையும் அழைதது அவாகளை ஒனறு சேர்தது அணைத்துக் கொளள அநத மூன்று சக்திகளும இணைநத அதி அதபுத வடிவு கொணட ஒரு ஆண எருமை ஒனறு தோன்றியது. அதறகு சுநதர மஹிஷம் என்று பெய ரிட்டு அதனிடம இந்திரலோகத்தில் தேவர்களை கொடுமைபபடுத்தும் கரமபிகை என்ற மஹிஷியை வசியப் படுத்தி பூலோகததில் இருககும் வனப்பிரதேசத்திற்குக கொணடு செல்லுமாறு பணித்தனா.

அதன்படி சுநதர மஹிஷம இந்திர லோகம சென்று மஹிஷியைக் கண் டது. உடன மன்மதனும் காம பாணத்தை விட்டான. சாபவசத் தால் காமம் நிரம்பப் பெற்ற மஹிஷி காம பாணத்திற்கு இலககாகி மோஹா வேசததுடன சுநதர மஹி ஷத்தின் பினனுல் இந்திர பதவியை யும மறநது சென்றது.

பூலோகத்தை அடைந்த அவ்விரு மஹிஷங்களும் பல காலம சுகித் திருநது பல மகவுகளைப் பெற்றன. இன்றும் கூட நாம பூலோகத்தில் காணும எருமைகள் அவற்றின் சந்ததிகளே இவ்வாருக பல காலம் சென்றது. இந்நிலையில், பஸ்மாசுரன் எனனும் அரக்கன சிவனை நினைத்து கடுநதவம புரிந்து அவா நேரில் தோன்றியதும், தன உளளங்கை

## அறிவிப்பு

திருமலையில காட்டேஜுகளுக்காக முன்பணம செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகாகளின் நன்மைக் காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதி களுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தா லும், மீதம் இருக்கும் நாட்களுககு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக காரணமாக மாற்றிக் கொள்ள நினைத்தால், அவர்கள் இரண்டு நாட்களுககு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப் பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விணணப்பித்துக் கொள்ள வேண்டும்

3. காட்டேஜுகளுக்காக முன பணம் செலுததியவர்கள் தஙகளுக்கு வழங்கபபட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத் திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள எண் ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரணடு நாட்களுக்கு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலைவா,
தி. தி. தேவஸ்தானம், திருபபதி.

யாருடைய சிரஸின்மீது வைததாலும் அவர் சாமபலாக வேணடும எனறு வரம கேட்டான

பரம சிவனும முனபின யோசியாமல் தநதேன வரததை என்றார்

கடவுளர்கள ஒரு நாளும் பொய்யான வரஙகள் தரமாட்டாாசள. ஆயினும பஸ்மாசுரனுககு பரமசிவன தநத வரத்தினமீது முழு நம்பிககை வரவில்லை. ஆதலால் அவர் எதிரிலேயே அநத வரத்தை பரீட்சிக்க எணணினன். ஆனல் அவன கண்ணில் முதலில் பட்டது சிவனுரின சிரம் தான. ஏன இவர் கொடுத்த வரத்தை இவரிடமே பரீட்சித்தால என்ன? எனறு எணணி தனது உள்ளங்கையை சிவனுரின் சிரம நோக்கி கொண்டு சென்றுன்.

பஸ்மா சுரனின, தீட்டிய மரத்திலேயே கூர பாாக்கும் குறிப்பையுணாநத சிவனுர், அங்கிருநது மறைந்தாா. இந்நிலையை யுணர்ந்த காக்கும கடவுளாம் ஸ்ரீமன் நாராயணா மறுபடியும் வனப்புமிகுந்த மோஹினிப் பெண வடிவு கொண்டு சிவனுரை துரத்திச செல்லும் அசுரர் முன் தோன்றினுர்.

அரக்க மனம் கரடு முரடானது. அதில் மென்மை என்ற சொல்லுககு இடமில்லை. ஆனல் மென்மையே மொதத உருக்கொணடு எழில் வடிவுடன் தோன்றும மோஹினியைக் கணட நொடியில் இளகிவிட்டது. தான் வந்த வேலை தனனுடைய தவப் பயன, தான் பெறற வரம, தனனுடைய இலககு யாவையுமே மறந்து விடடது.

அந்த அதி ரூபசுந்தரியை அககணமே அடைய விரும்பி அவனது அழகில் மயங்கி அடிமையாகி, அவள் சொற்படி யெல்லாம கேடடு சுய நினைவறறவனுய் மோஹ பரவசத்திலிருந்த பஸ்மா சுரனுககு சநதி சமயம் ஆகிவிட்டதை நினைவுறுததிய மோஹினி அவனை சந்தியா வநதனம செய்ய சொலலி ஆறறங்கரையை அடைந்து ஆசமனீயம செயயும சமயம கேசவா! நாராயணா! மாதவா! கோவிந்த விஷ்ணு! மது சூதனு! த்ரிவிசரமா! வரமனு ஸ்ரீதரா! ஹரிஷ்கேசா! பத்மநாபா! தாமோதரா! எனறு தாமோதரா சொலலும்போது தானுகவே பஸ்மாசுரன ஈச அவனது சிரஸினமீது வைத்ததுமணட பஸ்மாசுரன சிவனுரின வரத்தின் படி அக்கணமே சாமபலானன.

பிறகு மோஹினி சிவனுரை அழைகக, அதுவரை உருத்ராக்ஷத்திற்குள் புகுநதிருந்து இவறறை எல்லாம் பாாததுக கொணடிருந்த சிவனுா பயம் நீங்கி உருத்ராக்ஷததிலிருந்து வெளிப்போநதார். அதனுல தான் உருத்ராக்ஷத்தில் ஈசன் இருப்பதாய் இன்றும் நமபுகிறேம்.

எழில் வடிவுடன் மூனபொரு முறை அமுது படைத்தபோதே அநத மோஹினியின் மீது மையல்கொணட உமாபதியும், கங்காபதியுமான சங்கரன் இககணம் இரணடாம முறை தனித்து அருகில அவ்வுருவைக கணடதும ஆரத்தழுவிக் கொணடு விடடாா. அததருணம அவாகளின் வியர்வைத் துளிகள் ஒன்று கலநது ஒரு மாபெரும சக்தியாக வந்ததை பரமசிவன் கையில் ஏந்த அது ஒரு அழகிய குழநதையாக உருமாறியது. அது கண்டு தேவர்கள மலர்மாரி பொழிந்து, மஹிஷியை அழிகக, இரு ஆணதெய்வங்களுக்கு ஹரிஹரசுதன பிறந்து விட்டான் என்று மகிழ்சசி ஆரவாரம் செய்தனர்.

பிறகு அநதக் குழநதையை பமபா என்ற நதீதீரததில் பந்தள தேசத்தரசன ராஜசேகரபாணடியன கண ணில் படும் வணணம் விட்டனா. மோஹினி தன் கழுத்திலிருநத மணி மாலையை குழந்தையின் கழுத்தில் விட்டு ஆசி கூறி மறைநதனா.

பந்தள ராஜகுமாரன ராஜசேகர பாணடியன சிவபகதி நிரம்பப பெற்றவன். அவனது மனைவி ஒரு விஷ்ணு பக்தை. இவாகளைத் தவிர ஹரிஹர புததிரன் வளரவேறு ஒரு இடமுணடோ? வெகுகாலமாய தங்களுக்குக குழந்தை இல்லையே என்று அவ் விருவரும சிவனிடமும, விஷ்ணுவிடமும் முறையிட்டுள்ளனா. அவர்கள முறையே கேட்டதால்தான் தஙகள குழநதையை வளர்க்கும் பொறுப்பை அவாகளுக்கு அடையச் செயதனா.

வேடடையாட வந்த பாணடிய ராஜன் பமபையாற்றுககரையில் அனுதையாயக கிடைத்த குழந்தையைக கணடெடுதது, அதற்கு மணிகணடன் என்று பெயர் சூட்டி மிகுந்த நேசததுடன் வளாத்து வநதனர்.

சில நாட்களில் ராணி கருவுறறு ஒரு ஆண மகவைப பெற்றெடுத்தாள. அதற்கு ராஜராஜன் என்று பெயரும் சூட்ட இருவரையும் குருகுலாப்யாசத்திற்கு ராஜகுருவிடம் அனுப்பினா.

அப்போதைய ராஜகுரு மஹா தபஸவி; முககாலமும் உணர்ந்த ஞானி. குருகுலாபயாஸததிறகு வந்த இருஅரச குமாராகளில் மணிகணடன் தெயவக் குழநதை, ஸாக்ஷாத் ஹரிஹரபுத்திரன் என்பதைக் கண்ட மாத்திரத்தில் உணாநதாா. தனனிடம் வித்தை கறக வநதுள்ள தெய்வக் குழந்தை என்ன காரணத்திற்காக பூமியில் அவதரித்துளளதோ? ஆயினும் அக்குழந்தைக்கு பூலோக நியதிப்படிதான் வித்தை பயில்விக்க வேணடியது தமது கடமை என்றெணணி மிகுந்த பயபக்தியுடன மணிகணடனுக்குக் கற்பித்தார்.

குருகுலாப்யாஸத்தில் எல்லாக் கலைகளிலும் முதன்மையாய் வந்த மணிகணடன் குருகுலவாஸ முடிவில் குருவின் காலில் விழுந்து வணங்கி குருதட்சிணை என்ன வேண்டுமென இயமப குரு, மணிகண்டன் தனனிடம் மாணவனுய பயின்றதே தன்னுடைய முற்பிறவியின் நறபயனே என்று சொல்லி மணிகணடனின கால் பணிந்தாா. அதறகு மணிகணட பெருமான குருவிடம தான யாா என்ற உணமையை காலம் வரும் வரை யாருக்கும் தெரிவிக்க வேணடாமென கேடடுக்கொணடு குருவின் மகன் ஊமையும குருடுமாய் இருந்தவனை பாாத்து பேச வைத்து தன் தெய்வத தன்மையை நிலை நாட்டி குருவின் மனதில் மகிழசசியுணடாக்கி இதனுல குருவின குரு எனற பட்டத்தையும் அடைந்தார்.

# ஸப்தகிரி

## விளம்பர கட்டண விவரங்கள்

(தமிழ், தெலுங்கு, கன்னடம், இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வெளியிடப்படும் ஸப்தகிரியில், தங்கள் விளம்பரங்கள் இடம்பெற வேண்டுவோர்க்கு கீழ்வரும் விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன)

### சாதாரணம் *(உட்பக்கங்களில்)*

| | | |
|---|---|---|
| முழுப் பக்கம் | ரூ. | 80 00 |
| அரைப் பக்கம் | ரூ. | 50 00 |
| கால் பக்கம் | ரூ. | 30 00 |

### அட்டையின் பின்பக்கம்

| | | |
|---|---|---|
| ஒரு வண்ணம் | ரூ. | 200 00 |
| இரண்டு வண்ணங்கள் | ரூ. | 250 00 |
| மூன்று வண்ணங்கள் | ரூ. | 300 00 |

### உள் அட்டைகளில் *(முன் அல்லது பின்)*

| | | |
|---|---|---|
| ஒரு வண்ணம் | ரூ. | 150 00 |
| இரண்டு வண்ணங்கள் | ரூ. | 200 00 |
| மூன்று வண்ணங்கள் | ரூ. | 250 00 |

### பத்திரிகையின் முக்கிய இடங்களில்

| | | |
|---|---|---|
| முதல் பக்கம் | ரூ. | 125 00 |
| கடைசி பக்கம் | ரூ. | 110 00 |

செய்திச் சுருக்கம் பக்கத்திற்கெதிரில்

| | | |
|---|---|---|
| முழுப் பக்கம் | ரூ. | 100 00 |
| அரைப் பக்கம் | ரூ. | 60 00 |

### பக்க அளவு விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| முழுப்பக்கம் | 24 செ.மீ. | × | 19 செ.மீ. |
| அரைப்பக்கம் | 12 செ.மீ. | × | 19 செ.மீ. |
| கால்பக்கம் | 6 செ.மீ. | × | 19 செ.மீ. |

இடம் பெற வேண்டிய பிளாக்குகளை, விளம்பரங்களை வழங்குவோரே அனுப்புதல் வேண்டும்.

### பிளாக்குகளுக்குரிய ஸ்கிரீன் விவரங்கள்

| | |
|---|---|
| அட்டைப்பக்கங்களுக்கு | 80 லிருந்து 100 வரை |
| உட் பக்கங்களுக்கு | 80 |

விளம்பரம் அனுப்பும் நபர்கள் இதழின் பின் பக்கத்தைத் தவிர மற்ற வைகளுக்கு 6 மாத இதழ்களுக்கும், 12 மாத இதழ்களுக்கும் வரை ஒப்பந்தம் செய்து கொண்டால் முறையே 10 மற்றும் 15 சதவீதம், மேற்கண்ட தொகையில் தள்ளுபடி செய்யப்படும். இருப்பினும் கொடுக்கப்படும் அளவுகள், கட்டணங்கள் குறித்து பத்திரிகை ஆசிரியரின் (Editor) தீர்மானமே முடிவாகும். எந்தவிதமான அறிவிப்பும் இல்லாமல் விஷயங்களை ஏற்காமல் இருக்க ஆசிரியருக்கு உரிமை உண்டு.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி.

குருகுலாப்யாஸத்திலிருந்து அரண்மனையை அடைந்த மணிகண்டனுக்கு மன்னர் இளவரசப்பட்டம் சூட்டினார். அரச சபையில் பல கற்றவரும் அனுபவம் மிகுந்தவரும் அயரும் வண்ணம் பல சிக்கல் நிறைந்த வழக்குகளைத் தீர்த்து வைத்தார். இதனையெல்லாம் தன்னுடைய செல்வாக்கு குறைந்து வருவதை யுணர்ந்த அந்நாட்டு மந்திரி, தனக்கு எதிரியாகவே மணிகண்டனைப் பாவித்து பிற்காலத்தில் அரசனின் சொந்த மகன் ராஜராஜனே இந்த நாட்டை ஆளவேண்டும், கானகத்தில் கண்டெடுத்த மணிகண்டனை இந்நாட்டை விட்டே அப்புறப்படுத்த வேண்டும் என்ற முடிவில், அதற்கு மஹாராஜா எள்ளளவும் சம்மதியார், மஹாராணியே சிறந்தவர் என்று மஹாராணியின் மனதில் விஷவிதைகளைத்தூவி பலனும் பெற்றார்.

அதன்படி மஹாராணியும் மணிகண்டன் வாயாலேயே "தாயே எனக்கு இந்த சிம்மாஸனம் வேண்டாம். தம்பி ராஜராஜனே இந்நாட்டையாளட்டும். இளவரசப் பட்டம் சூட்டப் பெற்றதால் எனக்குப் பிறகு என் ஸந்ததியினர் கேட்பார்களோ என்ற ஐயம் கூட உங்களுக்கு வேண்டாம். நான் இந்த ஜன்மத்தில் திருமணமே செய்து கொள்ளமாட்டேன். ஆஜன்ம பிரும்மசாரியாகவே இருப்பேன்" என்று உறுதிமொழி பெற்றும் கூட மனதிருப்தியுறாத மந்திரி, மஹாராணிக்கு இல்லாத கடுமையான தலைவலியை இருப்பது போல் நடிக்க வைத்துஇதற்கு தகுந்த மருந்து புலிப்பால் தான், அது இருந்தால் தான் மஹாராணியின் தலைவலி நீங்கும் என்று அரண்மனை வைத்தியர்கள் அனைவரையும் சொல்லச் செய்தான்.

உடனே மணிகண்டன் தாயின் தலை நோவு தீர்க்கப் புலிப்பால் கொண்டுவர, மலர்ந்த முகத்துடன் அந்தப் பன்னிரெண்டு வயது பாலகன் காடு நோக்கி புறப்பட்டான்.

(அடுத்த இதழில் முடியும்.)

# மாயவனை மயக்கிய மங்கை

திருமதி. பானுமதி சுப்புஸ்வாமி,
திருப்பதி.

வைஷ்ணவ சம்பிரதாயத்தில் மகாவிஷ்ணு ஒருவர்தான் புருஷோத்தமன் - ஆடவன. மற்ற ஜீவராசிகள் ஆணுனாலும், பெண்ணுனாலும் பெண்பாலர்களே. பக்தி மார்க்கத்தில் வழங்கப்படும் தசவித பாவங்களில் நாயக நாயகி பாவமும் ஒன்று.

புருஷனைக் கண்டு புருஷன் மோகிப்பது மேட்டுமடை. புருஷனைக் கண்டு ஸ்திரீ மோகிபபது பள்ளமடை. மேட்டுமடையில் ஜலத்தை ஏற்றுவது கடினம். பள்ளமடையில் ஜலத்தை பாயச்சுவது எளிது.

மறற ஆழ்வாாகள் தங்களைப் பெணகளாகப்பாவித்துப் பரமனைக்காதலித்தனர். அந்தராத்மாவை நாயகியாகவும் பரமாத்மாவை நாயகனுகவும் வைததுப் பாடியிருக்கிறுர்கள். ஆண்டாள் பெண்ணேயாதலால் அவளுக்கு இப்படி பாவிக்க வேண்டிய அவசியமில்லாது போய்விட்டது. ஆண்டாள் இறைவனைத் தன் கணவனுகப் பாவித்து,

''மானிடர்க்கென்று பேச்சுப்படில வாழகில்லேன் கண்டாய்'' என்கிருள்.

ஆணடாள அஞ்சுக்குடிக்கே ஒரு செல்லப் பெணணுக வளர்ந்து, பிஞ்சாய்பபழுத்து தன் பாவனையாலும், பிறவியாலும் செய்கையாலும் பெண உலகத்தையே மேம்படுத்தி விட்டாள். இவள் தன தநதையை பெரியாழ்வாராக்கி மணுளன் அரங்கனை பெரிய பெருமாளாக்கினுள்.

ஸ்ரீ வில்லிப்புத்தூரில் திரு ஆடிப்பூரத்தில் துளசி செடியின் மடியில் தோன்றி வேயாகுல விளக்கானுள். பிறக்கும் போதே தெய்வ பக்தியினுல் தானே மாலையை அணிநது அதை தான் கணவனுக வரித்து விட்ட பெருமாளுக்குக் கொடுத்து அனுப்பி சூடிக்கொடுத்த சுடர்க் கொடியானுள். அவள் பக்தியில் பழுத்த தெய்வக் காதல் வெள்ளமாகி ''கண்ணனுகிய கடலை'' நாடினுள்.

பாவை நோன்பு நோற்று கோவை (நாச்சியார் திருமொழி) யும் பாடி கோவர்த்தனையே நினைத்து கனவிலேயே அவனை மணந்தும் கொண்டாள்.

எப்படி கம்பன் அயோத்தி ராமனை காவேரிக் கரை ராமனுக்கினுரோ அதே போல வடநாட்டில் பிறந்த கண்ணனை தமிழ்நாட்டுக் கண்ணனுக்கி விளையாடக் கண்டாள்.



பெருமாளுககுப் பூமாலை சூட்டியதுடன் மட்டுமன்றி பாமாலையும் பாடிப் பரவசமானுள்.

கண்ணன் அவதரித்த காலம் எப்போதோ நடநதது. அவன் நடமாடிய கோகுலம் விளையாடிய யமுனை நதி தீரம் எல்லாம் வடநாட்டில் எங்கோ உள்ளது. இப்படி எண்ணிய கோதைக்கு பாகவத சரித்திரம் வழி காட்டியது. ஆண்டாள் ஸ்ரீ வில்லிபுத்தூரையே கோகுலமாகவும் அங்குள்ள திருக்குளத்தையே யமுனையாகவும் வடபத்ரசாமி கோயிலையே நந்தகோபன் திருமாளிகையாகவும் பெருமாளையே கண்ணனுகவும் தன் தோழியர்களையே ஆயர்பாடி சிறுமியாகளாகவும் தானும் அச்சிறுமியர்களில் ஒருவளாகவும் பாவனை செய்து கொண்டு மார்கழி பாவை நோன்பு நோற்ருள்.

ஆண்டாள் அந்நோன்பை நோற்ற விதம், பரமனை அடைந்த விதம், பரமன் அருள் செய்த விதம் இவைகளை விளககுவதே திருப்பாவை.

திருவேங்கடமுடையானுக்கும் ஆண்டாளுக்கும தொடர்பு உணடு. திருவரஙகனையே ஆண்டாள் திருவேங்கடமுடையவனுகவும் கருதி காதலித்தாள் என்பதற்கு ஆண்டாள் வாக்கிலேயே சான்று கிடைக்கிறது.

உயயக்கொணடாா என்ற வைஷ்ணவ ஆசாாயார் அருளிய திருப்பாவை தனியனும சாட்சி அளிக்கிறது.

''வேங்கடவர்க்கு என்னை விதி என்ற இம்மாற்றம்'' என்பது உய்யக்கொண்டார் வாக்கு. என்னைத் திருவேங்கடவனுக்கு வாழ்க்கைப் படுத்துவாயாக என்பது இதன் பொருள்.

தெற்கே வில்லிபுத்தூரில் தோன்றிய ஆண்டாள் என்னும் சுடர்க் கொடி அக்கால தமிழகத்தின் எல்லையாகிய வேங்கட மலையிலுள்ள வாசுதேவதரு

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| அஷ்டோதர சகஸ்ரநாம அர்ச்சனை | ... | 1 | 00 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் | ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் | . . | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | . | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி | . . | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) | ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம (தொகுத்தவர்) தேசிகாச்சார்யா) | ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (தொகுததவர்) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் – தி. தி. தே – | ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம (பொருளுடன்) ,, | ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, | ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அமமையார்) | ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வணணப்படங்களுடன்) | ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை | ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) | ... | 4 | 00 |
| திருவாய்மொழி { கே. பாலசுந்தர நாயக்கர் விளக்கவுரையுடன் } பாகம் 1 | ... | 7 | 50 |
| பாகம் 2 | ... | 10 | 50 |
| யாபபொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி ராமநாத கனபாடிகள் | .. | 0 | 20 |
| நித்யாநுஸநதானம் – தி. தி. தே – | . . | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி.கே. நாராயணன) (அச்சில்) | ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வணணப்படங்களுடன்) தி.தி.தே - | .. | 8 | 00 |
| சித்திர திருப்பாவை (வண்ணப படங்களுடன்) தி.தி.தே- | ... | 8 | 25 |

## விற்பனைச் சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கலவெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கலவெட்டுத தொகுதி 1 மற்றும தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சஙகீர்த்தனமுலு' மறறும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கிஞல் 12½% தள்ளுபடி வழஙகப்படும்.

ரூ 100 அலலது அதற்கு மேறபட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருநது ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைகரு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கிஞல், அவற்றிற்கான தபால செலவினை தி. தி. தேஸவதானம் ஏற்கும்.

ஆசிரியர்,
தி. தி. தேவஸ்தானம்
(தி. தி. தே. பிரஸ் காம்பௌண்டு) திருப்பதி.

என்ற மகாவிருக்ஷததைத் தழுவி வாழுமாறு காதல் கொண்டதின் உட்பொருள் வைணவ ஆசிரியர்களின் உள்ளததைப் பெரிதும் கவாநதுள்ளது. இக்கருதது ஆணடாளின வாககாகிய நாச்சியார் திருமொழி, திருப்பாவை என்ற இரணடு பிரபநதங்களிலும் ஊடுருவிக் காணகிறது

''குளிர் அருவி வேங்கடதது என் கோவிநதன்'' எனறு குறிபபிடுவதில கோதைககு ஒரு திருப்தி; ஒருவித மனநிறைவு.கோதை பிறநத ஊர் கோவிநதன் வாழும் ஊர் என்று தொடங்குமு தனிப்பாட்டிலும் கோதைக்கு கோவிநதன் என்ற பெயரிலுள்ள ஆசை சுட்டிக் காட்டப்படுகிறது

திருப்பாவையின் 29 வது பாடலில்

''இனறு பறை கொள்வான அன்று காண்கோவிந்தா'' எனறுமு, அதற்கு முந்தியபாசுரத்தில''குறை யொன்றுமிலலாத கோவிநதா'' என்றும் ஆண்டாள குறிப்பிடுகிருள்.

நாசசியார் திருமொழியில கிளி எப்போதும் ''கோவிநதா கோவிந்தா'' என்று அழைப்பதாகக் குறிப்பிடுகிருள்.

ஆண்டாள பூமி தேவியின திரு அவதாரம். பகவான் பத்து அவதாரங்கள் எடுத்தபோது உலகத்தாயான திருமகளும அவனைப் பிரியாது ஒவவொரு நிலையில் பிறக்கிருள. இப்பிறவியை பிறவாத் தோன்றல் எனறு அழைப்பர். திருமகள் மட்டுமன்றி பூமாதேவியும் உடன் பிறககிருள் எனபதை ஸ்ரீநிகமாந்த தேசிகன,

**வேலேவ விஷ்ணு ஜலதேர்**
**அப்ருதக் பவந்தி''**

கடலும் கரையுமு போல பூமாதேவியுமு திருமாலை விட்டுப பிரிவதில்லை எனறு குறிப்பிட்டிருக்கிருர். ஆணடாள் பூமி தேவியின் அவதாரம்.

இவள்ஆடிமாதம் பூரநடக்ஷத்திரம் சுக்லபக்ஷம் சதுர்த்தி கூடிய செவ்வாய்க் கிழமையன்று அவதரித்தாள். திவய பிரபந்தம் பாடியவர்களில் இவள ஒருவளே பெண.



# அம்பரீஷன்

'ஆலம்'

(இறைவன் அடியாருக்கு வசமான வன். தன்னிடம் அன்பு பூண்ட அடியார்களைக் காப்பாற்றும் பொறுப்பைத் தானே மேற்கொள்கிறான். ஏகாதசி விரதத்தைச் சிறிதும் வழுவில்லாது கடைப்பிடித்து மேன்மை அடைந்தவர்களுள் அம்பரீஷனுக்கு ஒரு சிறப்பிடம் உணடு. இறைவன் அவனுக்கு அருள் பாலித்த கதை சுவாரசியமானது.)

நாபாகன் என்னும் அரசனின புதல்வன் அம்பரீஷன். ஏழு த்வீபங்களையும் அரசாண்டவன். இறையடியார்களில் மிகச்சிறந்தவன். பகவான் ஹரியினிடம் பக்தியுள்ளவனுய் இருந்திடினும், ஆட்சி அலுவல்களில் ஆழ்ந்த அககறையுடனும் விழிப்புடனும் இருந்தவன். பல அசுவமேத யாகங்கள் செய்து பெருமை சேர்த்தவன். அவனுடைய பக்திக்கு மெச்சி, பகவான் ஹரி அனுதினமும் அவனுடைய பாதுகாப்பின் பொருட்டுச் சககரம் ஒன்றை அருளினுர்

மகாவிஷ்ணுவிற்குப் பிரியமான ஏகாதசி நோன்பை அம்பரீஷன் மேற்கொண்டான். ஏகாதசி விரதம் இநதுக்கள் அனுஷ்டிக்கும ஒரு முக்கியமான நோனபு. வளர்பிறையில் ஒன்றும தேய்பிறையில் ஒன்றுமாக மாதம் இருமுறை ஏகாதசி உபவாசம் இருபபது உடல்நலத்திற்கும ஆனமிக மேமபாட்டிற்கும் நனமை பயப்பதாகும். மாதங்களில் சிறந்த மாாகழித திங்களில் வரும வளர்பிறை ஏகாதசி இறையன்பர்களுக்கு முக்கியமாக விளங்குவதாகும். வைகுண்ட ஏகாதசி, முக்கோடி ஏகாதசி, மோட்ச ஏகாதசி என்றெல்லாம் பெயர் பெற்றுள்ளது· சூரியனின் இயக்கத்தைக் கொணடு கணக்கிடப்படும் நமது ஆண்டு உத்தராயணம, தட்சிணுயனம் என்று இரு பிரிவுகளாகப பகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வோா அயனமும் ஆறு மாதம கொண்டதாகும். தேவ மானத்தில் அதாவது, தேவர்களின் அளவுமுறையில் நமது ஓராண்டு ஒரு நாளுக்குச சமம். உத்தராயணம் பகல், தட்சிணுயனம் இரவு. எனவே, வைகுண்ட ஏகாதசி இரவு முடிந்து பகல் துவங்குவதை அறிவிக்கும் வைகறைப் பொழுதைக் குறிக்கிறது. அவ்வமயம் முப்பத்து முக்கோடி தேவர்களும பூமிக்கு இறங்கி வருவதாகச் சொல்லப்படுகிறது. விஷ்ணு ஆலயங்களில வைகுணட ஏகாதசியன்று மட்டுமே திறக்கப்படும் வைகுண்ட வாசல் வழியாகச் சென்று திருமாலைத் தரிசனம் செய்தால் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுபட்டு வீடுபேறு எய்துவதாக பக்தர்களின் பாவனமான நம்பிக்கை.

இத்துணை மகிமை வாய்ந்த ஏகாதசி விரதத்தை ஓர் ஆண்டுக்காலம் பக்தியுடன் அம்பரீஷன் நோறருன். நோன்பை முடிப்பதற்கு முன் மூன்று நாள் உபவாசம் இருந்தான். மறுநாள் துவாதசியன்று காலை பாரணை செய்து உணவுஉட்கொள்ளவேண்டும். அமபரீஷன் ஏராளமான அந்தணர்களை அழைததிருநதான். இதனிடையில, துர்வாச மாமுனிவர் தமது மாணுக்கர்களுடன் அமபரீஷனின அரண்மனைக்கு எதிர்பாராதவகையில் வருகை புரிநதாா. மன்னனே அவரை மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்று, தனது விருந்தோம்பலை ஏற்றுத் தன்னை ஆசீர்வதிக்குமாறு அஞ்சலி செய்து வேண்டினுன். முனிவரும் அதற்கு இணங்கி, நீராடுவதற்காகத் தமது மாணுக்கர்களுடன் ஆற்றுக்குச் செனருர்.

எவ்வளவு நேரமாகியும் அவர் திரும்பி வரவில்லை. துவாதசி இருக்கும்போதே பாரணை செய்தாக வேண டும். அப்போதுதான் ஏகாதசி நோன்பின் பலன் கிட்டும். ஆனுல், இப்போது பாரணை செய்தாலோ முனிவரை அவமதித்ததாகும். ஏற்கனவே, அவர் ஒரு முன்கோபி எனினும், அவர் வரும்வரை காத்திருந்தாலோ, உரிய காலத்தில பாரணை செய்யத் தவறிய குற்றத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும். இக்கட்டான இந்நிலையில் என்ன செய்வது என்று அம்பரீஷனுக்கு விளங்கவில்லை. அங்கிருந்த அறிஞர்களிடம், தனக்கு ஏற்பட்டுள்ள இடரை எப்படி அகற்றுவது என்பதற்கான வழியைத் தெரிவிக்கும்படி கோரினுன். அவர்களும் தர்மத்தின் நுணுக்கங்களை ஆராய்ந்து விஷ்ணுவிற்குப் பிரியமான துளசியுடன் கூடிய நீரைப் பருகுவது தவறுகாது என்றும், நோன்பின் பயனும் கிடைககும் என்றும் அறிவுரை வழங்கினுர்கள். அவர்களுடைய கட்டளைப்படி, அமபரீஷன் துளசி இதழுடன் கூடிய தீர்த்தத்தை உட்கொண்டு பாரணை செய்தான்.

இதற்குள்ளாக, துர்வாசர் நீராடி விட்டு மாணவாகளுடன் திருமபி வந்தார். நடந்தது அனைத்தையும் உணர்ந்தாா. அவர் கண்கள் சினத்தினுல் சிவநதன. கோபத்துடன் பற்களை நறநற என்று கடித்தபடி "அம்பரீஷா, என்னை விருநதோமபலுக்கு அழைத்து விட்டு அவமானப் படுத்துகிருயா? அதற்குத் தக்க விளைவை அநுபவி'' எனச் சொல்லி, தமது தலையிலிருந்து ஒரு சடையைப் பிடுங்கித் தரையின்மீது அடித்தார். உடனே சக்தி வாய்ந்த உருவம் ஒன்று வெளிப்பட்டு அம்பரீஷன்மீது




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

திருப்பதி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் 'உ.பி.

## ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீ-ஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மை யார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மை யார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

பாய்ந்தது. அம்பரீஷன் எவ்வளவோ பணிவுடனும் மரியாதையுடனும நிலைமையை எடுத்து விளக்கிச் சொன்னான். ஆனால், துர்வாசர் அதைக்காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. வேறு வழி எதுவும் அரசனுக்குப் புலப்படவில்லை. எனவே, அவன் மகாவிஷ்ணுவைப் பிரார்த்தித்தான். அவர் அவனுக்கு அருளிய சக்கரம் தோன்றி, அம்பரீஷனைக் கொல்ல வந்தஉருவத்தை அழித்தது. அத்துடன நில்லாது, அச்சக்கரம் துர்வாசமுனிவரையும் தாக்கியது. முனிவர் எங்கு சென்றாலும் சககரம் அவரைத் துரத்திச் சென்றது. அவர் பிரமனிடம் சென்று முறையிட்டார். சக்கரத்தை நிறுத்துவதற்குத் தம்மால் ஆகாது என்று பிரமன கூறிவிட்டார். சிவனிடம் சென்று தம்மைக் காப்பாற்றுமாறு முனிவர் வேண்டிக் கொண்டபோது, அதற்கான ஆற்றல் தமக்குக் கிடையாது என்று சொல்லிவிட்டார். பின்னர், துர்வாசர் வைகுண்டத்திற்கே சென்று மகாவிஷ்ணுவிடம் மன்றாடினார். ஆனால், விஷ்ணுகூட "உம்மைக் காப்பாற்ற என்னாலும் முடியாது. நீர் அம்பரீஷனிடமே சென்று சரணடையவும்'' எனறு மொழிந்தார். அம்பரீஷன் மகாவிஷ்ணுவிற்கு எத்துணை நெருககமானவன் எனபதையும் விரத நியமத்தின உண்மைப் பொருளையும் அப்போதுதான் துர்வாசர் அறிந்து கொணடார். உடனே அம்பரீஷனிடம் வந்தார்; தம்மை மன்னித்துக் காப்பாற்றுமாறு வேண்டினார். அரசனும் மாமுனிவரிடம் எத்தகைய பகையும் பாராட்டாமல் பகவான் ஹரியைப் பிரார்த்தித்தான். உடனே, சச்கரமும் மறைந்தது.

வைகுண்ட ஏகாதசியன்று நியமத்துடன் உபவாசமிருந்து, ஸ்ரீஹரியைப் பலவாறாகப் போற்றி நோன்பிருப்பவாகள் அம்பரீஷன் சரிதத்தையும் நினைவு படுத்திக் கொள்வது நல்லது.

# நீர்மலை மேவிய நிமலன்

நல்லிலே கலைவண்ணம் கண்டவா கள் பல்லவாகள்· அப்பல்லவா களின் பெருமைகளை உலகறியச செய்வன இன்றைய வைணவ மற்றும் சிவாலயங்கள். இத்தொண்டை நாட்டிலே சமயக் குரவர்களால் பாடல் பெறற தலங்கள் சுமார் 22 எனலாம். அவற்றுள திருமங்கை மன்னனால் பாடல் பெற்ற தலமான திருநீர்மலையின் சிறப்பு தனித் தன்மை வாய்ந்தது என்பதில் ஐயமில்லை.

### அமைவிடம்

சென்னை தாமபரம் சாலையில் பண்டைய பல்லவர் புரமான பல்லாவரத் திலிருந்து சுமாா 5 கி.மீ.தொலைவில் சற்று வடகிழக்கில் அமைவது திரு நீர்மலை.

### பெயர்க் காரணம்

திருநீர்மலை என்றால் விபூதி விளையும மலைபோலும் என நினைக்கத் தோனறும். ஆனால் அதுவல்ல காரணம். 'ஸ்ரீமத் தோயாத்திரி சிகரம்' என்ற வடசொல்லின்படி அமைவது திருநீர் மலை. அதாவது நீர் சூழ்ந்த மலை என்பதேயாகும்.

### இறைவன் பெயர்

இம்மலையில் கோயில கொணடவன் திருமாலே. கார்மேக வண்ணனாகிய மாலவன் நீர்வணணனாகக காட்சி தருவதால் 'நீர்மலை மேவிய இறைவன' எனப்பெயர் பெறுகினறான்.

### தலச் சிறப்பு

இஙகுக் கோயில்கொண்ட மாயவனை,தூயவனைத் திருமஙகை மன்னன் பாடிமகிழ்ந்து மங்களாசாசனம் செய்த தலம்; முதலாழ்வார் மூவருள் ஒருவரான பூதத்தாழ்வாரும் பாடி மகிழ்ந்த தலம்.

நெடுமாலவன் மேவிய கோலஙகள் நிற்றல், இருத்தல், கிடததல், நடத்தல என்பன. அவற்றில பெரும் பாலும் மூன்று நிலைகளில் கோயில் கொணடமையைப பல தலங்களில் காணலாம. ஆனால் ஒரே தலத்தில் நான்கு நிலைகளையும் ஒரு சேரக் காணும் வாயப்பு இத்தலத்தில் மட்டும்தான் உள்ளது.

### தாயார் பெயர்

'அணி திகழுஞ் சோலை அணி நீர் மலையில்' அன்றுயர் குலககொடியோடு அணி மாமலர் மங்கையோடு உள்ள மாலவன நின்றான், இருந்தான் கிடந்தான் நடந்தாற்கு இடம் மாமலையாவது நீர்மலையே' என்று பொருள் வரும் பாடலிலே தாயார் அணிமாமலர் மங்கைஎன்பதும் தெரிகிறது.

### பாடல் பெற்ற தலம்

108 திருப்பதிகளுள் ஒன்றான இதனைக்காண ஆவல் கொண்ட திருமங்கை மன்னன், இம்மலைக்கு வந்த போது இதனைச் சுற்றிலும் நீர் சூழ்ந்திருநதது அருகே செலல இயலாதிருந்தமையால், அருகிருந்த மங்களகிரி எனுமிடத்தில் ஆறுதிங்கள் காத்திருநது, நீர்வறறியபின் இறைவனை வணங்கி மங்களாசாசனம செய்த தாக வரலாறு கூறுகிறது. அவர் இருநத இடம் 'திருமங்கையாழ்வார் புரம்' என்ற பெயரில் இம்மலைக்கு சில கிலோ மீட்டர் தொலைவில் உளளதை இன்றும் காணலாம்.

### தீர்த்தம், ஆகமம்

கோயிலின் தெனமேற்கில் அமைவது 2 ஏக்கர் பரப்பளவுள்ள புஷ்கரணி தீர்த்தக் குளம். கோவிலில் 'வைகாநஸ' ஆகமப்படி பூசைகள் நிகழ்கின்றன.

### கோயில் அமைப்பு

கோயிலில் நுழைந்ததும் வலப் புறத்தே கோயில் கொண்டவன் நீர்வணணன். எதிரே அரஙகநாதரின் செபபுருவச்சிலை கண்ணாடி அறையில் காணப்படுகிறது. அருகே சிலை உருவில் நீர்வணணன நினறான் என்ற பெயரில் காட்சி தருகிறான். எழில் கொஞ்சும உருவம ஆழ்வார்கள் திருவடிகள் ஆகியோா கரம் குவித்து வணங்கக் காட்சி தருகிறாகள்.

அதனைவிட்டு வெளியே வந்ததும் சகரவர்த்தித் திருமகனின் திருமணக் கோலமும், பள்ளியறையும அணிமா மலர் மங்கைத் தாயார் சந்நிதியும் காணப்படுகின்றன. நீர்வண்ணன் நீர்மலை மீதில்லாமல் அடிவாரத்திலேயே நின்ற கோலத்தில் உள்ளான்.

### மலைக்கோயில் அமைப்பு

சுமார் 200 அடி உயரம் கொண்ட மலைமீது மரங்களும் செடிகளும் வளர்ந்து இனியசோலையாகக காட்சி தருகின்றன. மலை உச்சியில் அரவணைப்பள்ளி கொண்ட அரங்கநாதன் காட்சி நல்குகிறான். நான்கு திருககரங்களுடன் நாபிக்கமலத்தே நான்முகனைத் தாங்கி திருமகள், பூமகளுடன் புன்னகை சிந்த அறிதுயில் கொண்ட எம்பிரான் தென்திசை இலங்கை நோக்கிக் கிடந்த கோலத்தில் காண்பார் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறான. நீர்மலையில் இந்த அரங்கன்தான் சிறப்பிடம் பெற்றுவருகின்றான்.

திரு. செ. சந்திரவாணன், எம்.ஏ.,
தஞ்சை.

### இருந்தான், நடந்தான்

மலைமீதுள்ள திருச்சுற்றில் வலம் வந்தபோது கிடந்தானின் பின்புறம் ஈரடியால் உலகளநத திரிவிக்ரம அவதார உருவம் நடந்தான் என்ற பெயரில் காணப்படுகின்றது. அதற்கு அடுத்த நிலையில் இரணியனை வதம் செய்து பிரகலாதனின் குழந்தை மனம் அஞ்சாத நிலைக்கேற்ப இரண்டு திருக்கரங்களோடு சாநத நரசிம்ம

ராய் இருநது கணடாா யாவரையும் யமங்கச செய்யும் அழகுருவில் காணப்படுகிறது.

ஸ்ரீரங்கம முதலாக நரநாராயணு-சிரமம் ஈருகச் சொல்லபபடட தான் தோன்றித தலமான 'ஸ்வயம் வயக்த க்ஷேத்திரத்தில' இது ஒனறு என்ருல் இத்தலப் பெருமை போற்றற் குரியது.

**கவிதையில்**

'கச்சி வெஃகாவில கிடநதிருநது நின்றதும்' 'என்னுள்ளத்து நின்ருனி-ருந்தான் கிடககுமே' எனறும்; புளிக் குடிக கிடநது' வரகுணமங்கை-யிருநது வைகுநதத்துள் நின்றும், உகந்தருளின நிலங்களெங்கும் பண ணும் விருப்பத்தைத் திருநீர்மலே யிலே பணணிக்கொணடு வநதும்' எனப்பலவாறு அடியார்கள் தம் பாட்டில் இறைவனேப் பாடிப்பர விஞர்கள்.

**காதற் கவிதையுள்**

நாயக நாயகி பாவத்தில அடிய வர்கள் தம்மை நாயகியாகக் கொணடு இறைவன் மேல் காதல் கொணட விதம் பல. நீர்வணணனே மனத்துள் கொண்ட ஒருத்தியின் புலம்பல் இதோ

'அருவிசோா வேங்கடம்
நீாமலே என்று வாய்
வெருவிஞள்; மெய்யம்
வினவியிருக்கின்ருள;
பெருகுசீர்க் கண்ணபுர
மென்று பேசிஞள்
உருகிஞள்; உளமெலிந்தாள்,
இது வென், கொலோ,

என்று அவள்மடல் ஏறி 'நீாமலேமேல் மனனுமறை நான்குமாஞனே எணணி யே உயிர்விடத் துணிநதாளாய்' நீருக்கு அவியாதே நீர்வணணனே அவிக்க வேண்டியிருக்கை' என அவன கொடுத்த நோய்க்கு அவனே யே மருந்தாகக கொள்ளும் விதம் அவளது காதற் பெருமையைப் புலப் படுத்தும்.

**கல்வெட்டுகள்**

விக்ரம சோழன் காலம் முதல் (கி. பி. 1118) விஜயநகரத்து வீர வேங்கடராயனின் (கி. பி. 1600) காலம் வரையான கல்வெட்டுகள் 34 காணப்படுகின்றன.

**ஊர்பற்றி**

இககோயில் கலவெட்டுள இவ் வூரைக் குறிப்பிடுகையில் 'செயங் கொணட சோழமணடலத்துப் புலி யூர்க கோட்டத்துச் சுரததூர் நாட்டுத் திருநீர்மலே' எனக் குறிப பிடப்படுவதைக் காணலாம்.

**இறைவனேப் பற்றி**

இறைவனேக் குறிப்பிடுகையில் 'திருநீர் மலே எம்பெருமான' 'நீர் வண்ணன், 'நீாவண்ணப் பெருமான்' எனவும, மலேமீதுள்ள இறைவனேச் 'சிங்கப்பெருமாள்', 'அழகிய சிங்கப் பெருமாள்' எனவும் குறிப்பிடப் பட்டுள்ளன.

கிடநதானேயும, நடநதானேயும் குறிக்கப்படாமையால் அவை பிற் காலத்து எழுந்திருக்கலாம். கட்டிட அமைப்பாலும் அவை கி. பி. 12ம் நூற்ருணடையதாகக் காணப்படுகின் றது.

**சிறப்புச் செய்திகள்**

கல்வெட்டுகள பெரும்பாலும் விளககு வைகக தானம் தந்ததைச் சொல்லுகின்றன.

பமமலேச சார்ந்த எண்ணெய் வியாபாரி 'பம்மணக்க நாயஞா' எனற ஒருவர் விளக்கு வைக்க எண்ணெய்த தானம தநதார் என்ப தால் இன்றைய பம்மல் பணடு தொட்டே இருநது வருகின்றது என் பது தெளிவு. இவை மட்டுமல்ல, நீாமலேயைச் சுற்றியுள்ள சில ஊர் கள வரலாற்று சிறப்பு மிக்கவை.

**நிலம் தானம்**

நிலமாகவும் தானம் தரப்பட்ட தைக் கல்வெட்டு குறிக்கிறது. ஆந்திர நிலக்கிழார் ஒருவா பலவாறு முயனறும் தம நோயைப் போக்க இயலாமல் இந்த இறைவன் இருப்பி டம வநதபோது நோய் தீர்ந்தமை யால் 'ஒங்கோல' வட்டத்துள்ள தம் நிலம் அனேததையும் இககோயி லுக்கே எழுதிவைத்தாராம். இன்றும் ஆந்திர நிலவருவாய் இக்கோயி லுக்கு வருகிறது.

**பிற செய்தி**

'கண்ட கோபாலன் புது மாடை' என்ற காசு பறறியும் திருவிழாவுக் குத் தானம பெறறமையும் கல்வெட் டுகள் குறிக்கின்றன. 'திருவாலே பரப்பிஞன சநதி' என்ற வைணவ விழா பற்றிய குறிப்பு தெரிகிறது. 'வலமிருநதான் பஞ்சநதிவாணன' எனபவன இககோயிலுக்கு விளக்கு வைகக தானம் தநததும் தெரிகிறது. 'ஈழப்படை வெனருன' என்பவனும் இவ்வாறு தானம தந்ததைக் கல் வெட்டு குறிப்பிடுகின்றது.

**திருவிழாக்கள்**

மலேமீதுள்ள அரங்கனே இப்போது பிரதான இறைவன். சித்திரையில பிரம்மோத்ஸவம் துவஙகி மாதநதோ றும் வைணவத் திருவிழாககள் சிறப் புற நடைபெற்று வருகினறன. பங்குனித் திருக் கலயாணம் அரங்க னுக்குச் சிறப்புடையது. நீர்வணண னுக்கு மாசி உத்திரத்தில் திருககல் யாணம் நடைபெறும். இடையில் நின்றிருநத தேர்த் திருவிழாவையும், தெப்பத் திருவிழாவையும், இப்போ துள்ள நிர்வாகம் தொடங்க இருக் கின்றது.

**முடிப்பு**

'நெஞ்சுள்ளும் கணணுள்ளும் நின்று நீங்காத நீாமலேயானே அவனது சிறப்பையும் தலப்பெருமை யையும் பேசும அளவின்றிது 'வம்மின்' என்ற திருமங்கை மனனன கூற்ருேடு கூறி

'ஸ்ரீமத் தேர்யாத்ரி சிகரே ஸ்ரீரங்க
ஸதனேதிதம
க்ஷீர புஷ்கரணி சேஷசாயி நாமாச்
ரயே '

என்ற திருநீர்மலேமீது திருவரங்க விமானத்துள் தோன்றிய திருப்பாற் குளத் தீாத்தத் தலேவனும், பன்னகப் பள்ளி கொணடானுமாகிய திருவரங் கனே உள்ளத்துள் இருத்திக் கொள வோம். இவ்இறைவனே ஒருமுறை கண்டு தரிசித்தால் 'நீர்வணணன் நீர் மலேக்கே போவேன்,' எனற உறுதி தான மேலோங்கும என்பது திண்ணம்.



